# துறவி

1958 மலர் 1 | திங்கள் வெளியீடு | டிசம்பர் இதழ் 5.




## தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்,

திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

பதிப்பாளர்:

சுவாமி. ஞானனந்தா.

சின்னமடம், எறும்பூர்.

வளையமாதேவி P. O. சிதம்பரம் தாலுக்கா.

வருட சந்தா ரூ. 2—0—0

உ

சிவமயம்.

# கடவுள் வாழ்த்து.

---

"விண்ணாளுந் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்கா ணம்மானாய்."

"தூயதமிழ் நாட்டுத் துறவிகள் சங்கமென்றும்
ஞாயிறுபோன் மக்களுக்கு நன்மைசெயத்—தாயாகும்
உண்ணா முலையாம் உமைசே ரொளிப்பிழம்பாம்
அண்ணா மலைதுணையா மால்."

## வாழ்த்து.

"அந்தண ரென்னும் அறவோர் அநுபவத்தை
இந்த வுலகோர்க் கெடுத்துரைக்க—வந்த
துறவி வெளியீடுந் தூயதமிழ் நாடுந்
துறவறமும் வாழியமா தோ."

---

## பொருளடக்கம்,



---

தமிழ் வாழ்க! உ அருணெறி வளர்க!

சிவமயம்.

# தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கத்தின் ஒன்பதாவது மாநாடு.

"தூயதமிழ் நாட்டுத் துறவிகள் சங்கமென்றும்
ஞாயிறுபோல் மக்களுக்கு நன்மைசெயத்—தாயாகும்
உண்ணா முலையாம் உமைசேர் ஒளிப்பிழம்பாம்
அண்ணா மலைத்துணையா மால்."

தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத்தின் ஒன்பதாவது மாநாடு குறித்த முன்னறிவிப்புச் சொற்பொழிவுகள் *16–11–53* திங்கள் முதல் *18–11–53* புதன்கிழமை வரை, காலை 9 மணி தொடங்கி 12 மணிமுடிய நடைபெற்றன.

முதல்நாள்– *16–11–53* திங்கட்கிழமை, தவத்திரு. சுவாமி. ஞானானந்தா அவர்கள் தலைமையில், தவத்திரு. சுவாமி. அருணகிரிநாதரவர்கள் 'கடவுள் இலக்கணம்' என்பதைப் பற்றியும்; திருவாளர், கண்ணன் அடிகள் 'திருவருள்' என்பதைப் பற்றியும்; பொன். குமாரசுவாமி அடிகள் 'நீத்தார் பெருமை' என்பதைப் பற்றியும் மிக அழகாகப் பேசினார்கள்.

இரண்டாம் நாள்– *17–11–53* செவ்வாய்க்கிழமை தவத்திரு சுவாமி. அருணகிரிநாதர் அவர்கள் தலைமையில், தவத்திரு. சுப்பிரமணிய அடிகளாரவர்கள் 'வள்ளுவர் வாய்மை' என்றும்

தொடர்ச்சி; நம்பர் 3-ம் பக்கம்.

உயிர்கள் பலவகைப்பட்ட தகுதிகளையுடையவர்களாதலின், அத் தகுதிகளுக்கேற்ப ஆசிரியனால் செய்யப்படும் தீக்கையும் பலவகைப்படும். விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் முத்தி உயிர்களில் ஆணவமலம் ஒன்றேயுடைய விஞ்ஞானகலருக்கும், ஆணவம் கன்மம் ஆகிய இருமலமுடைய பிரளயாகலருக்கும் செய்யப்படும் தீக்கை நிராதார தீக்கை எனப்படும். இந் நிராதார தீக்கையைச் சிவபெருமானே விஞ்ஞானகலர் பிரளயாகலர்களுக்கு ஆசிரியர் அதிட்டானமின்றி முறையே உண்ணின்றும் முன்னின்றும் நேரே செய்கின்றான்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையுடைய சகலர்களுக்கு இருவினையொப்பு அடைதலாகிய தகுதி வந்த காலத்தில் சிவபெருமான் ஒரு ஆசிரியனை அதிட்டித்துநின்று மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் சத்திநிபாதம் முறையில் வைத்துச் செய்யும் தீக்கை சாதார தீக்கை எனப்படும். சகலருடைய மலபரிபாகமும் பலவகைப்படுதலின் அவர்களுடைய தகுதிக்கேற்ப அவர்கள் மலத்தை யொழிக்கும்படிச் செய்யப்படும் சாதார தீக்கையும் பலவகைப்படும். அத் தீக்கைகள் 1. நயனதீக்கை, 2. பரிசதீக்கை, 3. வாசகதீக்கை, 4. மானசதீக்கை, 5. சாத்திர தீக்கை, 6. யோக தீக்கை, ஔத்திரி தீக்கை என எழு.

1. **நயன தீக்கையாவது:—** மாந்திரிகன் பாம்பினாற் கடியுண்டவனைக் கருடபாவனையினாலே பார்த்துப் பாம்பின் விடம் தீர்த்தல்போல ஆசிரியன் சீடனைச் சிவபாவனையினாலே பார்த்து மலநீக்கம் செய்தலாகும்.

2. **பரிச தீக்கையாவது:—** ஆசிரியன் தன்னுடைய கையில் மந்திரத்தினால் சிவசத்தி நிறையும்படிச் செய்து அக் கையைச் சீடனுடைய தலையில் வைத்துச் சிவசத்தியை அவனிடம் இறங்கும்படிச் செய்து அதனால் அவனிடத்துள்ள மலவலியை நீக்கஞ் செய்தலாகும்.

3. **வாசக தீக்கையாவது:—** ஆசிரியன் சீடனுக்கு அவனுடைய மலம் நீங்கும்படிப் பதினொரு மந்திரங்களுடன் அஞ்செழுத்தையும் அவற்றின் பொருளையும் அவற்றை ஓதும் முறைமையையும் உணர்த்துவதாகும்.

௧.

ஓம்

# "துறவி"

---

## தீக்ஷை.

---

பதிப்பாளர். சுவாமி. ஞானானந்தா.

தீக்ஷை என்னும் வடமொழிச் சொல்லானது தமிழில் தீக்கையெனத் திரிந்தது. மலத்தைக் கழுவி அறிவைக் கொடுத்தல் என்பது அதனபொருள். ஆசிரியன், சீடனிடத்துச் சிவத்தன்மையை வெளிப்படவொட்டாது தடையாக மறைத்து நிற்கும் மலவலியைக் கெடுத்துச் சிவத்தன்மையை வெளிப்படச் செய்தலாகிய கிரியையே தீக்கையாகும். மாந்திரிகன் ஒருவன் கருடபாவனை செய்ததனாலுண்டான தன் மந்திரவலியால் பாம்பு கடித்த விடத்தைப் போக்குதல்போல ஆசிரியன் சிவோகம் பாவனை செய்ததனாலுண்டான தன் அருள்வலியால் சீடனிடத்துள்ள மலத்தைப் போக்குகின்றான். ஒருவன் சைவ குலத்திற் பிறந்தானேனும் அவன் தீக்கை பெற்றாலன்றிச் சைவனாகமாட்டான்.

சைவ சமயத்திலன்றிப் பிற சமயங்களில் ஆணவமலத்தின் உண்மை கூறப்படவில்லை. தீக்கையானது உண்மை அறிவுப் பேறு அடைய மேலான உறுப்பாயிருக்கின்றது.

சைவ தீக்கையானது தகுதியுடையவர்களுக்கு அவரவர் தகுதிக்கேற்பச் செய்யப்படுதலன்றிப் பார்ப்பன மக்கள் செய்யும் உபகாரணச் சடங்குபோலச் சாதிபற்றிச் செய்யப்படுதலின்று. பஞ்சமகுலத்திற் பிறந்த ஒருவனும் தகுதியுடைவனாயிருந்தால் மேலான நிருவாண தீக்கை பெற்றுக்கொள்ளலாம். பெத்தான் சாம்பான் என்னும் பஞ்சமப் பெரியார், சிதம்பர தீக்ஷிதர்களில் ஒருவராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகளால் இறைவனது ஆணையின்படி தீக்கை செய்யப்பெற்றதே இங்கு எடுத்துக் காட்டாகும்,

லில்லாத இளைஞர், முதியோர், அறிவு குறைந்தவர், பெண்கள், நோயுடையோர், பல போக விச்சையுடையார் முதலியோருக்கு ஆசிரியன் பீஜ மந்திரங்களைச் சேர்க்காமல் பதினொரு மந்திரங்களையும் அஞ்செழுத்தையும் ஓதும்படி உணர்த்தி ஒமக்கிரியைகளுடன் செய்யுந் தீக்கையாகும். இத் தீக்கைப் பேறுடையார்களுக்குச் சமயம், விசேடம், நிருவாணம் என்னும் மூன்று தீக்கைகளுஞ் செய்யப்படும். பிறருக்கு நித்தியம், நைமித்திகம், காமிகம் என்னும் கிரியைகளைச் செய்யும் அதிகாரம் கொடுத்தலாகிய ஆசாரியாபிடேகம் இவர்களுக்குச் செய்யப்படமாட்டாது. ஆதலின், இது நிரதிகார தீக்கையெனவும் பெயர்பெறும்.

சபீச தீக்கையாவது—மலபரிபாகமானவுடன் கற்றறிந்து சமய ஒழுக்க வழியில் வழுவாது நிற்கும் ஆற்றலுடைய உத்தமர்கட்கு ஆசிரியன் பதினொரு மந்திரங்களையும் அஞ்செழுத்தையும் பீஜா மந்திரங்களுடன் உச்சரிக்கும்படி உணர்த்தி ஒமக்கிரியைகளுடன் செய்வது. இந்தச் சபீச தீக்கையில் சமயம், விசேடம், நிருவாணம், ஆசாரியாபிடேகம் என்னும் நான்குவகைத் தீக்கைகளுஞ் செய்யப்படும். ஆசாரியாபிடேகஞ் செய்யப்படுதல்பற்றி இது சாதிகார தீக்கை எனவும் பெயர் பெறும். இத் தீக்கைப் பேறுடையார் தீக்கை வேறுபாட்டால் சாதகர் ஆசிரியர் என இருதிறப்படுவர்.

இந்தச் சபீச தீக்கையும் உலோகதருமிணி, சிவதருமிணி என இருவகைப்படும்.

உலோக தருமிணியாவது— இல்லறத்தில் ஒழுகுகிறவர்களுக்கு திரோதான சத்திரூபசிகாச் சேதமின்றிச் செய்யப்படுவது. இது பௌதிகதீக்கை யெனவும் பெயர் பெறும்,

சிவதருமிணியாவது— துறவிகளுக்குத் திரோதான சத்திரூப சிகாச்சேதஞ் செய்து செய்யப்படுவது. இது நைட்டிக தீக்கை எனவும் பெயர் பெறும்.

தீக்கையானது தகுதியில்லாதவருக்குச் செய்தலும், தகுதியுடையவருக்குச் செய்யாதிருத்தலும் ஆசாரியனுக்குக் குற்றமாம். தகுதியில்லாதவர்க்குச் செய்யுந் தீக்கையாற் பயன் உண்டாகாது. தகுதியுடையாருக்கு அவர்கள் விரும்பிய பொழுது தீக்கை செய்யப்படாவிட்டால் அவர்கள் தீக்கைப் பேற்றிநெல் அடையக்கூடிய பயனை இழப்பர்கள்.

4. மானச தீக்கையாவது:— ஆசிரியன் தனது ரேசக வாயுவினால் வெளியே வந்து சீடனுடைய பூரக வாயுவுடன் அவனுடைய இருதயத்திற் புகுந்து சீட சைதன்யத்தை வாங்கித் துவாதசாந்தம் வரை பிராசாத மந்திர உச்சாரண சகிதம் கொண்டுபோய்ப் பின்பு தன் இருதயத்தில் சிவ சைதன்யத்துடன் கலந்ததாகப் பாவித்து அச் சீட சைதன்யத்தைச் சீடனுடைய உடலிற் பிரதிட்டை செய்தலாகும்.

5. சாத்திர தீக்கையாவது:— ஆசிரியன் சீடனுக்கு ஆகமங்களிற் கூறிய பதி பசு பாச இலக்கணங்களை உணர்த்தி அவன் அறியும்படிச் செய்தலாகும்.

6. யோக தீக்கையாவது:—ஆசிரியன் தனது யோகத்தால் சீடனுடைய இருதயத்திற் பிரவேசித்து அவனுடைய சீவனை மலம் நீங்கும்படிப் பார்த்துச் சிவனிடத்திலே யோசித்தல் ஆகும். (யோசித்தல்—கூட்டுவித்தல்)

7. ஒளத்திரி தீக்கையாவது:— ஹுதம் அதாவது ஓமக்கிரியைகளுடன் செய்யப்படுவது. இந்த ஒளத்திரி தீக்கையும் ஞானவதி, கிரியாவதி என இருவகைப்படும்.

ஞானவதியாவது:— குண்டம், மண்டலம், அங்கி, நெய், சுருக்கு, சுருவம் முதலியனவெல்லாம் ஆசிரியன் மனதால் கற்பித்துக்கொண்டு விதிப்படி அகத்தே மூலாதாரத்தே இடை நாடி சுழுமுனை நாடிகளாகிய சுருக்கு சுருவங்களால் நெற்றியில் பிராணாயாமத்தாலுண்டாகிய அமுதமாகிய நெய்யைப் பெய்து குண்டலிசத்தியை எழுப்பி ஆகுதி முதலிய கிரியை செய்வது.

கிரியாவதியாவது:— குண்டம், மண்டலம், அங்கி, நெய், சுருர்கு, சுருவம் முதலியன வெல்லாம் புறத்தே அமைத்துக் குண்ட மண்டலத்தில் விதிப்படி வளர்த்த நெருப்பில் சுருக்குச் சுருவங்களால் நெய்யைப் பெய்து ஆகுதி முதலிய கிரியை செய்வது.

ஞானவதி, கிரியாவதி ஒவ்வொன்றும் நிர்ப்பீச தீக்கை, சபீச தீக்கை என இருவகைப்படும். ஆகவே, ஒளத்திரி தீக்கையானது, ஞானவதி நிர்ப்பீசம், ஞானவதி சபீசம், கிரியாவதி நிர்ப்பீசம், கிரியாவதி சபீசம் என விதியால் நான்கு வகைப்படும்.

நிர்ப்பீச தீக்கையாவது— தீக்கைக்குப் பின் வழுவின்றிச் செய்யக்கடவனவாகிய சமய ஒழுக்கங்களைப் பயிலும் ஆற்ற

நெறியில் அரைப்பங்கு உண்மையறிவை அடைந்து அரைப் பங்கு மலவலியினின்று நீங்குகின்றான். யோகநெறியில் முக்காற் பங்கு மலவலியினின்று நீங்குகின்றான்.

கிரியையாளன் சிவலிங்கப்பெருமானைப் பூதசுத்தி, ஆன்ம சுத்தி, தத்துவ சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்னும் ஐந்து சுத்திகளையுஞ் செய்து, அக வழிபாடு (அந்தரியாகபூசை) செய்து புறத்திலும் எரிவினை செய்து, நறுமணப் புகை, திரு விளக்கு, தூயநீர், பூ முதலிய வழிபாட்டுப் பொருள்களைக் கொண்டு வழிபடுகின்றான். அவன் இவ்வாறு தனது தகுதிக் கேற்ப சிவலிங்கப்பெருமானை அகத்திலும் புறத்திலும் அரு உருவத் திருமேனியில் வழிபடுகின்றான். அக வழிபாடாவது, இருதயத் தானத்தில் முப்பத்தாறு தத்துவங்களுக்கு மேல் ஆன்மா இருக்கிறதாகவும், அந்த ஆன்மா வெளியினுள்ளே அருட்சத்தியும், அருட்சத்தியினுள்ளே சத்திமானாகிய சிவமும் இருக்கிறதாகப் பாவித்து வழிபடுதல். அகவழிபாடல்லாத புற வழிபாடு பயன் தராது.

(தொடரும்)

---

# மாரியல்லது காரியமில்லை.

பொன். குமாரசுவாமி அடிகள்,
மெய்கண்டார் கழக ஆசிரியர், கணித சோதிடர், காஞ்சீபுரம்.

இவ் வாக்கியம் ஔவை யெம்மன்னையார் அமுதமொழி யென்பது நந்தமிழுலகம் நன்கறியும். இதன் பொருள் மழை பெய்யாதாயின் உலகில் ஒரு காரியமும் நடைபெறாதென்பதாம். இதனை நம் முதற் பாவலர் திருக்குறளில் 'வான் சிறப்பு' என்று பத்து குறட்பாவால் விரிவாகப் பேசியுள்ளார். நம் மூதாட்டியார் அதனைச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல் என்பதற்கிணங்க சிறிய வாக்கியமாக அடக்கிக் கூறியுள்ளார். வான் சிறப்பின் முதற் குறளில்,

"வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்த மென்றுணரற் பாற்று"

அதாவது, அமிழ்தம் உண்டவர்கள் சாவாது நிலைபெறுதல் போல், உயிர்களின் பிறப்பு எஞ்ஞான்றும் இடையறாது உடம்போடு காணப்பட்டு வருதலால், மழையை அமிழ்தமென்று

சமய தீக்கையானது ஒருவனைச் சைவசமய எல்லைக்குட் புகும்படிச் செய்கிறது. சமயம் புகச்செய்யும் தீக்கையாகலின், அது சமய தீக்கையென்னும் பெயர்கொண்டது. சைவசமயத் திற்கே சிறப்பாக உரிய சரியை,கிரியை,யோகம்,ஞானம் என்னும் நான்கு நெறிகளில் சரியை நெறியைச் சார்ந்தது சமய தீக்கை யாகும். தீக்கையை அவன் ஆசாரியாபிடேகம் பெற்ற, தக்க ஆசாரியனிடம் பெறுகின்றான். சமயதீக்கையைப் பெற்றவன் சைவ ஒழுக்கத்திற்கு உரியவனாகின்றான்.

சமய நெறியில் ஒருவன் ஒரு ஆசாரியனிடம் சமய தீக்கையைப் பெற்று தனது தகுதிக்கேற்ப இறைவனைப் புறத்திரு மேனியில் வழிபடுகின்றான். அவ்வழிபாட்டுக்கு உரிய தொண்டு களையும் அவன் யாதொரு பயனுங் குறியாது இறைவனது அருள்வழியில் நின்று செய்கின்றான். அத்தொண்டுகள் திருக் கோயிலில் அலகிடுதல்; மெழுக்கிடுதல், நந்தனவனம் வைத்தல், பூக்கொய்து தொடுத்து மாலை சாத்துதல், நறும்புகையிடுதல், திருவிளக்கேற்றுதல், பன்னிரு திருமுறைப் பாக்கள் ஓதல், சிவனடியார்களுக்கு அவர்கள் உவந்த தொண்டு செய்தல் முதலியன.

சரியை நெறியில் வழுவாது ஒருவன் சிலகாலம் ஒழுகி முன்னையிலும் நுணுகிய அறிவு உடையவனாகின்றான் அதனால் அவன் ஏறக்குறைய காற்பங்கு உண்மை அறிவை அடைகின்றான். அவனிடத்துள்ள மலங்களினது வலியும் காற் பங்கு அவனைவிட்டு நீங்குகின்றது.

பின்னர் அவன் கிரியை நெறியிற் சென்று தக்க ஆசாரிய னிடம் விசேட தீக்கையைப் பெறுகின்றான். அது சமயதீக்கை யினும் சிறப்பு உடையதாகலின் விசேட தீக்கை எனப்பட்டது. இத் தீக்கையில் ஆசாரியன் ஓமகுண்டத்தில் வாகீஸ்வரனையும் வாகீஸ்வரியையும் ஆவாகித்து அவன் ஆன்மாவை வாங்கி வாகீஸ்வரனால் வாகீஸ்வரி கருப்ப நாடியுற் செலுத்திக் கருப்பாதானம் முதலிய கிரியைகளை மும்மூன்று ஆகுதியின் கிரப்பிக் கருமுதிர்ந்து பயந்ததாகப் பாவித்துக் குண்டத்தி னின்றும் ஆன்மாவை மீள வாங்கி அவனுடைய இருதயத்தில் தாபித்து சிவனுடைய மகனாகச் செய்கின்றான். விசேட தீக்கை பெற்றவன் சிவபூசைக்கும், யோகநெறிக்கும், சிவாகமம் ஓது தற்கும் உரியவனாகின்றான். இத் தீக்கையால் அவன் கிரியை

"ஏரி னுழாஅர் உழவர் புயலென்னும்
வாரிவளங் குன்றிக் கால்"

மழையென்னும் வருவாய் தன் பயன் குன்றின், உழவர் ஏரால் உழுதலைச் செய்யார். எனவே. மழையின்மை உழவின்மைக்கும், உழவின்மை உணவின்மைக்கும், உணவின்மை உயிரின்மைக்கும், உயிரின்மை உலகின்மைக்கும் ஏதுவாம். இதனால் மழையா லுழவும், உழவா லுணவும், உணவா லுயிரும், உயிரா லுலகமும் உளவாம் என்பதாம்.

மக்களது முயற்சியால் ஆக்கமும், மடியாற் கேடும் வருமெனினும், அம்முயற்சியும் மடியும் மழையுண்மை இன்மைகளால் நிலைபெறுதலின் அம்மழையே ஆக்கமும் கேடும் ஆக்க வல்லதாம்.

"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை" என்றனர்.

மழை யில்லையாயின் ஓரறிவுயிருந் தோன்றாதெனின், மற்றவுயிர்களின் தோற்றஞ் சொல்லவா வேண்டும்!

"வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு
சிறப்பொடு பூசனை செல்லாது" என்றனர்.

"தானந் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனில்"

மழை பெய்யாதாயின், அறநெறியா லீட்டிய பொருளை, தக்கார்க்கு உவகையொடு இல்லறத்தார் செய்யுந் தானமும், மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதாதிகளால் உண்டி சுருங்கல் முதலிய துறவறத்தார் செயயுந் தவமும் ஆகிய இரண்டு அறங்களும் இல்லாதனவாகும். ஆகவே, மன்னுயிர்த் தொகுதிகள் மழையின்றி வாழாவென்பது தெள்ளிதிற் புலனும்.

தோன்றாத் துணையாகிய ஆதி பகவன், தன் திருவருள் வடிவாகிய சத்தியை மழையெனத் தோன்றும் துணையாக நிறுத்திப் பெய்வித்து உலகுயிர்களைக் காத்து வருகின்றான்.

நம் சமய குரவராகிய மணிவாசகப் பெருமானும், மேகத்தை அம்பிகையின் திருமேனியாகவும், மின்னலை உமாதேவியின் இடையாகவும், இடியோசையை அம்பிகையின் சிலம்பொலியாகவும், சிவபெருமான் உயிர்கண்மாட் டிரங்கியருளும் கருணையை மழையாகவுங் கூறிப் போற்றித் துதித்திருக்கின்றார்.

மதிக்குந் தகுதியுடைய தென்றனர். தனக்கு உதவிசெய்து வருபவரது பெருமையை உணர்ந் தொருவன் போற்றானாயின், அவன் செய்ந்நன்றி கொன்ற மகனாய்ச் சிறுமையுறுதல்போல், தமக்கு இதஞ்செய்து இறைவனது திருவருளாகிய மழையை மக்கள் மாட்சியுடன் மதித்துப் போற்றாராயின் தாங்களும் மதி யிலராய் மதிப்பிழப்ப ரென்பதாம். உணவை யுண்பவர்க்குச் சுத்தமான நல்ல உணவுகளை உளவாக்கித் தானும் உணவாய் நிற்பது மழையாகும். மழையானது பலவகையிலும் உயிர்களது பசியையும் தாகத்தையும் தீர்ப்பதாகும். கற்பிற் சிறந்த சீதா பிராட்டியார் இலங்கையிற் சிறையிலிருந்தபோது, நீரையே பருகி உயிர் வாழ்ந்திருந்ததை, தூதுவந்த மாருதியிடஞ் சொல்லுங் காலத்தில், இச் சிறையை விட்டு எங்குஞ் செல்வ தில்லை; ஒவ்வோர் சமயம் என்னாயகன் திருமேனியை நிகர்த்த இந் நீர்நிலைக்குச் சென்று சிறிது நீருந்தி உயிர் வாழ்வேன் என்பதை,

"தீர்வி லேனிதோ ருபக லுஞ்சிறை
வீரன் மேனியை மானுமிவ் வீங்குநீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்
சோரு மாருயிர் காக்குந் துணிவினால்"

என்றனர் கம்பர். இதனால் மக்க ளுயிர்வாழ்க்கைக்கு இன்றி யமையாது வேண்டப்படுதலால் "மாரியல்லது காரியமில்லை" என்றனர்.

மழையானது வேண்டும் பருவ காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின் "விரிநீர் வியனுலகத்: துண்ணின் றுடற்றும் பசி" மக்களை வருத்தும் என்றனர். பின்னும்,

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்வி பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரோடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி"

என்றனர் சீத்தலைச் சாத்தனார்.

"மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்."

என்றனர் ஔவையார்.

"கோணிலை திரிந்து வாழி குறைபடப் பகல்கள் மிஞ்சி
நீணிலை மாரி சுன்றி விளைவஃகிப் பசியும் நீடி
பூண்முலை மகளிர் பொற்பின் கற்பழிந் தறங்கள் மாறி
ஆனஇவ் வுலகு கேடாம் அரசுகோல் கோடின் என்ருன்"

என்பது சிவகசிந்தாமணி.

மன்னன் தன் நாட்டில் நிகழும் குற்றங்களை நாள்தோறும் நன்கு ஆராய்ந்து தக்கபடி முறை செய்யானுயின் நாடு சீர் கெடும். இதனை

"நாடோறு மன்னவன் நாட்டில தவநெறி
நாடோறும் நாடி அவன்நெறி நாடானேல்
நாடோறு நாடி கெடுமுட நண்ணுமால்
நாடோறுஞ் செல்வம் நரபதி குன்றுமே"

என்றனர் திருமூலர்.

அரசனது கொடுங்கோன்மையால் வருத்தமுற்றுப் பொறுக்கமாட்டாமல் குடிக ளழுத கண்ணீரே அவன் செல் வத்தை அடியோ டழித்தற் கருவியாமெனப் பெருமக்கள் பேசுவர்.

"துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழ முயிர்க்கு"

மழையில்லாமை இவ்வுலகத்திற்கு எப்படித் துன்பம் பயக்குமோ அப்படியே அரசன் அளியின்மை, அவன் நாட்டில் வாழும் மக்களுக்குத் துன்பம் பயக்கும் என்பதாம்.

அரசன் நெறியோடு நின்று உயிர்களைக் காவானுயின் பசுக் களும் பால் குன்றும், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட் பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகைப்பட்ட தொழி லுடைய பார்ப்பனரும் நூல் மறப்பர். இதனுல் பால் மிகு தலும் நூல் நிலவுதலும் அரசன் செங்கோலின் பயனென்பது பெறப்படுகிறது.

"ஆவையும் பாரையும் மற்றற வோரையும்
தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே"

என்பது திருமந்திரம்.

ஆகவே, மக்களுக்கு அரசன் செங்கோலே ஆதரவு என்பது தெள்ளிதித் புலனும்.

கடவுளிடத்து, அக்கினியிற் சூடுபோலப் பிரிப்பின்றி யிருக்கின்ற அருட்சத்தியின் ஆற்றல்தான், உலகில் உயிர்ப் பொருள்களையும் உயிரில் பொருள்களையும் இயக்கி ஆளவல்லது. அருட்சத்தி தொழிற்படவில்லையானால் உலகமுந் தொழிற்படாது; அத் திருவருட் சத்தியே மழை வடிவாகத் தோன்றிப் பெய்து உலகுயிர்களைக் காத்து வருதலாகும்.

மழை யொருகாற் பெய்தலும், மற்றொருகாற் பெய்யாதிருத்தலும் எத்தகைய அறிவாற்றலுடைய மக்களின் சத்திக்கும் மேற்பட்ட ஒரு சத்தியின் தொழிற்பாடென்பதைக் கற்றோரும் கல்லாதவரும் அறிவுடையாரும் பேதையரும் கண்கூடாகக் காணக்கூடிய தொன்றாம்.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ வுலகு"

மக்களுடைய பதிலுதவியை விரும்பாது பெய்துவரும் திருவருளாகிய மழைக்கு என்ன உதவி செய்யமுடியும் என்பதாம்.

இம் மழையானது பருவந் தவறாது பெய்து வருவதற்குச் சில காரணங்களுண்டு. அதில் முதற்காரணம் அரசன் செங்கோலாகும்.

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒவ்வாது வானம் பெயல்"

('உறை'—என்பது மழைத்துளி)

நீதி தவறிய மன்னர் நாட்டில் மழை பெய்யாது கொடுங்கோலாற் கேடு விளையும்.

"கோன்நிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடில் மாரிவளங் குறையும்
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயி ரென்னும் தகுதியின் றாகும்"

என்றனர் சீத்தலைச் சாத்தனார்.

அரசன் முறைதவறி நடந்தால் மழைவளங் குன்றிப் பெருந்துயர் மிகும்.

"வேந்தன்தன் முறைதிறம்பின் வேதவிதி திறம்பும்
எந்திழையார் தங்கற்பும் இல்லறமு மில்லாவாம்
மாந்தர் பசியா லுணங்க மழைமறந்து
பாந்தள் முடிகிடந்த பாரின்விளை வஃகுமால்"

என்பது பிரமோத்தர காண்டம்.

சை. சி. ஆ,— வேறோருடம்பில் ஒருவன் தன்னுடம்பை விட்டுப் புகுதலை இப்பொழுது இவ்விடத்தில் நாம் கண்டில மாதலின், அதனை கட்டுக்கதை என்கின்றனையாயினும், ஒரு நாளும் விடாமல் நாமெல்லோரும் கனவின்கண்ணே தம் தம் வேறு வேறு உடம்புகளிற் புகுந்து எவ்விடத்தும் இயங்குகின்றனம். அப்படி யியங்குதலால், ஒருடம்பிலுள்ள அறிவு மற்றோருடம்பினும் வினைப்பயனாகச் சென்றடையுமென்பதே யுண்மையாகும். ஆகையால், அறிவு, வேறுடம்பிற் சென்றடையுமென்றது பழுதற்றதாகும் என வுணர்வாயாக.

உலோ.— கனவின்கண்ணே தோன்றும் பொருள்கள் யாவும் நனவிலே கண்ட பொருள்களின் நினைவாகுமே யொழிய வேறில்லை. ஆதலால், கனவின்கண் வேறுடல்கள் தோன்றுகின்றன. அவற்றில் நாம் புகுகின்றனம் என்று கூறுதல் குற்றமாகும்.

சை. சி. ஆ,— நனவிலே கண்ட பொருள்களின் நினைவு தான் கனவிலே தோன்றுவதன்றி வேறுடல்கள் முதலிய பொருள்கள் தோன்றுதல் இல்லை என்றால், நனவிலே நம் முடம்புகள் பறந்து செல்வதில்லை. கனவிலோ பறந்து செல்லக் காண்கின்றனம். நனவிலே நாம் நம்மை இவ்வுலகத்தில் வாழ்வதாக அறிகின்றனம். கனவிலோ துறக்கத்தில் (சுவர்க்கத்தில்) உறைவதாக அறிகின்றனம். இப்படி யறிகின்றமையால்,நனவின் கண்ணே கண்டவற்றின் நினைவே கனவின்கண் தோன்றுகின்றன என்பது பொருந்தாது. இல்லை நனவின்கண் காவிய முதலியவற்றில் தேவர்கள் வானவெளியிற் செல்லுதல் முதலியவற்றைப் படிக்கக் கேட்கின்றனம். கேட்டவற்றின் நினைவே நாம்பறப்பதாகவும் இந்திரவுலகத்தில்இருப்பதாகவும் தோன்றுகின்றன. இப்படிக் கண்டவற்றின் நினைவும் கேட்டவற்றின் நினைவும் ஒன்று சேர்ந்தோ தனித்தனியாகவோ தோன்றுகின்றன. புதிதாகவொன்றுமங்கே தோன்றவில்லையென்றுரைப்பினு முரைப்பாய், அப்படியானால் புராணகாவியங்களில் பிரமன் நான்கு முகங்களை யுடையவன், எட்டுக் கண்களையு முடையவன் என்று பிரமனைப்பற்றிச் சொல்லக் கேட்கின்றனம். ஒருகாலும் நம்மை நாம் நான்கு முகமுடையோமாக, எட்டுக் கண்களை யுடையோமாகக் கனவிற் காண்பதில்லை. கேட்ட நினைவு அங்கே யேன் தோன்றக்கூடாது. ஆதலால், கேட்ட நினைவுதான் நாம் பறப்பதாக இந்திர வுலகிலிருப்பதாகக் கனவிற் றோன்றுகின்றன என்பது பொருந்தாது. கனவின்கண் புதியவுடம்பு முதலிய பொருள்கள் தோன்றுகின்றன என்ப துண்மையாகும்.

(தொடரும்)

"மாநிலங் காவல னாவான் மன்னுயிர் காக்குங் காலைத்
தானத னுக்கிடை யூறு தன்னாற்றன் பரிச னத்தால்
ஊனமிகு பகைதி றத்தாற் கள்வரால் உயிர் தம்மால்
ஆனபயம் ஐந்துந் தீர்த் தறங்காப் பானல் லனோ"

என்பது பெரியபுராணம்.

மன்னவன் நீதியில் நின்று அரசு செய்யவேண்டும். நின்றிலனேல் மழை பெய்யாது. அதனால், உலகியல் நடைபெறாது. ஆதலால், "மாரியல்லது காரியமில்லை" யென்றனர் ஔவையெம் மன்னையார்.

"வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்."

---

# கொல்லாமை.

பண்டித. சித. நாராயணசாமி, திருவையாறு.

(முன் தொடர்ச்சி)

உலோகாயதன்:— அப்படி ஒருடம்பின்கண் ணுள்ளதாய அறிவு, மற்றோருடம்பின்கண் புகுந்து முன்னுடம்பை யிடமாகக்கொண் டியற்றிய அறமறங்களின் பயனாகிய இன்பதுன்பங்களை நுகரும் என்னில், காளைப் பருவத்தை விரும்பிய ஒரு கிழவன் காளைப் பருவமுடையவ னிறக்கக் காணில் அந்தக் காளைப் பருவமுடையவ னுடலில் நுழையக் கண்டிலேம். அவ்வாறு நுழைதலில்லாமையால் ஒருடம்பின்கண் ணுள்ள அறிவு மற்றோருடம்பின்கண் ணுழையுமென் றுரைத்தல் பொருந்தாதன்றோ?

சைவ சித்தாந்த ஆசிரியர்:— இவ்வுலகத்தில் ஒருவன் தான் பெற்ற வுடம்பை விட்டு வேறோருடம்பில் நுழைதலுமுண்டு; இவ்வாறு நுழைதலைப் பரகாயப் பிரவேசம் என்பர்.

உலோ.— அப்படி ஒருடம்பைவிட்டு வேறோருடம்பிற் புகுதலாகிய பரகாயப் பிரவேசத்தை எவருஞ் செய்ய நாம் கண்டிலமே. ஒருவன் தன்னுடம்பை விட்டு வேறோருடம்பிற் புகுவான் என்பது அம்மி பறக்கக் கண்டேன் என்பதுபோன்ற உலகப் பொய்க்கதை (கட்டுக்கதை) யாகும்.

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற"

ஒருவன் தன் மனத்தில் குற்றமில்லாதவன் ஆதலே அறமாகும். குற்றம் உண்டானால் அவன் செய்யும் அறங்கள் ஆரவாரமாகிய தன்மையன. அறம் என்ற சொல் அறு என்னும் பகுதியடியாகப் பிறந்த சொல். தீவினையை அறுப்பதென்று பொருள் படும். ஒருவன் தனது அறிவின்மையால் தீவினையை யடைகின்றான். அறியாமையென்பது இருள். அந்த இருளை அகற்றுவதுதான் அறத்தின் பயன். அறத்தினைச் செய்யும் ஒருவனிடத்துள்ள அறியாமையாம் இருளகலும். அவ் விருளகலவே உண்மைப் பொருள் தோன்றும். மெய்ப்பொருள் தோன்றவே பொய்ப் பொருள்களிடத்தே பற்று அறும். பற்றறவே பேரின்பப் பெருவாழ்வினை யடைவன்.

இவ்விதமல்லாமல் மனம் வேறு, சொல் வேறாகச் செய்யும் அறவினைகள் உள்ளத்தைப் பற்றமாட்டா. எனவே, அறியாமையாம் இருள் அகலாமல் மேன்மேலும் வளர்ந்து உயிரையுங் கவர்ந்து மெய்ப்பொரு ளுணர்வைக் கெடுத்து என்றுமுளதாய இன்ப வாழ்வினை எய்தவொட்டாமல் தடை செய்வதாகும். தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவாய் மலர்ந்த திருக்குறள் உலகிருளகற்ற வந்த ஒப்பற்ற சூரியனுடைய ஓராழித் தேர் என்றே உரைக்கலாம்.

இக் குறட்பாவினை அவ் வாழியின் அச்சாணி என்றே கூறலாம். அறமென்பது சிந்தையி லமைதலே அறமென்றமையின், மனத்தின் குற்றமில்லாமல் அறம் செய்யவேண்டுமென்றால் எவ்வெக் குற்றங்களை நீக்கல் வேண்டும் என்று நமது வள்ளுவனாரே அறிவுறுத்துகின்றார் அடுத்து.

'அழுக்காறவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்"

பிறராக்கம் பொறாமையும் பேராசையும் இவற்றின் காரணமாக உளதாகும் வெகுளியும், அதனால் வரும் கடுஞ்சொல்லும் ஆகிய இந்நான்கையும் விலக்கி இடையறாது நடந்து வருவதே அறமாகும்.

(தொடரும்)

# அறம்.

**ஸ்ரீயாறடிகள், சித்தபாலைய தேசிகராதீனப் புலவர் அடிவாரம், பழநி.**

அறமாவது நல்வினை. நல்வினையையே ஒவ்வொருவரும் உறுதியாகக் கடைப்பிடித்தல் வேண்டும். 'நன்மை கடைப்பிடி' என்பது ஒளவையார் அருள்மொழி. செய்யத்தக்க நல்ல செயல்கள் இன்னவை, செய்யத்தகாத செயல்கள் இன்னவை என்றுணர்ந்து நல்லனவே செய்பவர்கள்தான் மக்கள் என்று சிறப்பாகப்பெறுவார்கள். 'மக்கள்' என்ற சொல் சிறப்புடை மனிதர்களையே குறிப்பதாகும்.

அறமானது எல்லாவற்றினையும் விடச் சிறந்த விடு பேற்றினையும் தரும். இவ்வுலக இன்ப நுகர்ச்சிக்குக் காரணமான செல்வத்தையும் அளிப்பதாகும். ஆகையால், உயிர்களுக்கு அறமே சிறந்த ஆக்கமாகும். ஆக்கமாவது மேன்மேலுயர்தல். அறத்தை மறப்பனுயின் அவன் செல்வமும் சிறப்பு மிழந்து நிற்பனென்று மட்டும் நினையல் வேண்டா; அவனுக்குக் கேடும் உண்டாம். அதுபற்றியே நமது ஒளவையாரும் 'அறஞ்செய விரும்பு' என்றும், 'அறனை மறவேல்' என்றும் அருளினர். "அறத்தினூங் காக்கமு மில்லை யதனை, மறத்தலினூங் கில்லை கேடு" என்பது நமது திருவள்ளுவப் பெருந்தகையார் திருவாக்கு. இத் திருக்குறட்பாவைத் தமது உளமாம் களத்திடை நன்கு பதித்தார் ஒரு நற்புலவர். அவர் வாக்கிலிருந்து அருங்கவியாக வருகிறது அக்குறட்பாவின் கருத்து.

"அறத்தினூங் காக்க மில்லை யென்பது மிதனை யாய்ந்து
மறத்தினூங் கில்லை கேடும் என்பதும் மதித்த வர்தம்
திறத்தினை யறிந்து கோண்மின் தீங்கதிப் பிறவி யஞ்சில்
மறத்தைநீத் தறத்தோ டொன்றி வாழுநீர் வையத் தீரே"

என்பது மேருமந்த புராணம்.

பொருளினாலாவது உடம்பினாலாவது நாவினாலாவது, பார்வையினாலாவது, வேறு எவ்வகையினால் இயலுமோ அவ்வகையினாலாவது பிற உயிர்கட்கு நன்மை செய்ய வாய்த்த போதெல்லாம் செய்தல் வேண்டும். "ஆற்றுந் துணையா லறஞ் செய்கை முன்னினிதே" இனியவை நாற்பது

ராப்பர் 2-ம் பக்கம் தொடர்ச்சி.

பொருள் பற்றியும்; திருவாளர். கண்ணன் அடிகள் 'திருவாசகத் தேன்' என்னும் பொருள் பற்றியும்; S. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T. அவர்கள் 'அடியார் பெருமை' என்னும் பொருள் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள்.

மூன்றும் நாள்— 18-11-53 புதன்கிழமை தவத்திரு. சுவாமி. அருணகிரிநாதர் அவர்கள் தலைமையில், திருவாளர். கண்ணன் அடிகள் 'திருவாசகத் தேன்' என்பதையும்; தவத்திரு. குக. சதாசிவ அடிகளார் 'குக பரத நட்பு' என்பதையும் தெளிவாகவும், விரிவாகவும் எடுத்துரைத்தார்கள்.

19-11-53 வியாழக்கிழமை காலை 8 மணிக்கு, துறவிகள் திருக்கூட்டத்தின் ஊர்வலம், திருவருணை, சா. ந. சாதுக்கள் சத்திரத்திலிருந்து மேளவாத்தியம், யானை, தேவஸ்தான விருதுகளுடன் புறப்பட்டு மாட வீதியை வலமாக வந்து சக்தி விலாச சபாமண்டபத்துக்குச் சென்றமர்ந்தது.

சிதம்பரம், தேவார ஆசிரியர், திருவாளர். M. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் திருமறை ஓதினார்கள். மாநாட்டுத் திறப்புரையை, திருவருணை, திருவாளர். அ. தா, ப, திருஞான சம்பந்தம் அவர்கள் நிகழ்த்தினார்கள். தவத்திரு. குக. சதாசிவ அடிகளார் அவர்களையே இவ்வாண்டும் தலைவராக இருக்க வேண்டுமென்று தவத்திரு. சுவாமி. அருணகிரிநாதரவர்கள் பிரேரிப்பிக்க, தவத்திரு. சுவாமி. ஞானானந்தா அவர்களால் ஆமோதிக்கப்பட்டு, தலைவர் அவர்களை தலைமை தாங்கும்படி கேட்டுக்கொள்ள, தலைவர், குக. சதாசிவ அடிகளார் அவர்களும் தலைவர் பதவியை யேற்றுத் தலைமை தாங்கினார்கள். தலைவரவர்களின் முன்னுரைக்குப் பின், ஆண்டறிக்கையை சங்கச் செயலாளர், தவத்திரு. சா.ந. சொரூபானந்தம் அவர்கள் வாசித்தார்கள். பின்னர் 'பெண்ணின் பெருமை'யைப்பற்றிச் சைவமணி, ச. கண்ணன் அடிகளாரும்; 'சமயத்தொண்டு' என்ற தலைப்பின்கீழ் கோவைக்கிழார், C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் B.A., B.L. அவர்களும்; 'ஐந்தொழில்' என்னும் பொருள் பற்றி, சிதம்பரம், மௌனசுவாமிகள் மடம், தவத்திரு. சபாபதி சுவாமிகள் அவர்களும்; 'வித்தை' என்பதைப்பற்றி, தவத்திரு நீலகண்ட சுவாமிகள் அவர்களும்: 'பக்தி' என்னும் பொருள் பற்றி, சித்தூர், தவத்திரு. சாந்தானந்த அடிகளும், 'துறவின் தொண்டு' என்னும் விஷயமாய், S. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T. அவர்களும் சொற்பொழிவாற்றினார்கள். சில தீர்மானங்கள் நிறைவேறியபின் தலைவரவர்கள் முடிப்புரை யாற்றினார்கள். பின்பு தவத்திரு. சுவாமி, அருணகிரிநாதரவர்கள் நன்றி கூறியதோடு கூட்டம் இனிது முடிந்தது.

---

Printed By: Rm, Natarajan Chettiar at Pandiian Press, Chidambaram,
Edited and Published by, Swami Gnanananda "Chinnamadam" Erumbur.

# மெய்நெறி வெண்பா.

கோளப்பாக்கம், சுவாமி. அருணகிரிநாதர்.

(முன் தொடர்ச்சி)

**இறையருள் ஆலயத் தெளிதி லடையலாம்,**

14. "உடலிற் பரவி யுறுஞ்செங் குருதி
மடுவிற்பா லாகி வரல்போல்—கடவுளரும்
வேலைசூழ் வையமெலாம் மேவியிருந் தும்பயனை
ஆலயத்தே யார்ந்தருளு வார்."

**எல்லா மதத்திலும் இருப்பதோர் கடவுளே.**

15. "மெத்தை தலையணைகள் வேறுவே றுடைகளால் [பொருள்
தைத்திடினு மெத்தெனலைத் தான்கொடுக்க—வைத்த
பஞ்சியொன்றே போலப் பலமதத்தும் நன்மைதரும்
எஞ்சாப் பொருளிறையோன் றே."

**கடவுள் ஒருவனே காண்பல தெய்வமாம்.**

16. "சூலம்வேல் சக்கரம்வாள் தோற்றம்வே றுனுலும்
மூலப் பொருளிரும்பே முக்கியம்போல்—மாலயனும்
சங்கரனு மற்றுமுள சாமிகளு மாகியெங்கும்
தங்குதெய்வத் தன்மையொன்று தான்."

**எந்நெறிகளிலு மோர் செந்நெறியே மேல்.**

17. "ஊரேங் கணுகி னுளதெனினும் வேட்கையுற்றோர்
பாரங் கணைநீர் பருகுவரோ!—ஏர்பெறவே
எம்மதமுஞ் சம்மதமே யென்றாலும் இன்னலிலா
செம்மைநெறி நிற்பதுவே சீர்,"

**எல்லாஞ் சிவன்செயல் என்று தீ நெறிபுகேல்.**

18. "எல்லாஞ் சிவன்செயலே எல்லாஞ் சிவமயமே
அல்லா திலையென் றறிந்தாலும்—சொல்லவொணுப்
பொல்லாப் புலியின்பாற் போனுல் இறுதியுண்டாம்
ஒல்லா நெறியுமவ்வா றோர்."

**முற்றுண ரிறையைச் சிற்றுயி ரறியா.**

19. "கள்வன்மேற் காவலர்கள் காட்டுகின்ற மின்விளக்கால்—
கள்வனறி யானந்தக் காவலரை—வெள்விடையோன்
ஞானவொளி வீசி நமையறிவான் நம்மவர்கள்
ஊனவிழி யாலறியார் ஓர்."

(தொடரும்)

REGD. M. No. 6356.

உ

## 'துறவி' இதழ்கள் வெளியீட்டிற்கு நன்கொடையளித்தவர்கள்.

---

| | | |
|---|---|---|
| தவத்திரு | நாகப்பூர் சுவாமிகள், சாது நிலையம், அடிவாரம், பழநி. | ரூ. 101—0—0 |
| ,, | சங்கமூர்த்தி, சுவாமி, முக்தானந்தா கர சிவ. மடம், வியாசர்பாடி. சென்னை. | 101—0—0 |
| ,, | சுவாமி அருணகிரிநாதர், நாராயண தேசிகர் நிலையம், கொளப்பாக்கம். | 101—0—0 |
| ,, | முத்தைய சுவாமிகள், சின்னமடம், எறும்பூர் | 101—0—0 |
| ,, | பெருமாள் சுவாமிகள், திருவண்ணாமலை | 25—0—0 |
| திருவாளர். | செ. இரத்தினசாமி செட்டியார் அவர்கள், சிதம்பரம். | 51—0—0 |
| ,, | T. வெங்கடேசம்பிள்ளை அவர்கள், மிராசுதார், ஆச்சாள்புரம். | 51—0—0 |

---

## "துறவி" நேயர்களுக்கு அறிவிப்பு.

தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத் தலைவர், குக. சதாசிவ அடிகளார் அவர்களை "துறவி" இதழின் வெளியீட்டின் கௌரவ ஆசிரியராக 1954-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் நியமிக்கப்பட்டிருக்கிறதென்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

சுவாமி, ஞானானந்தா.

பதிப்பாளர்.

11—12—53